

உ

சிவமயம்.

# விளம்பரம்.

---

இதனால் சகலமானவர்களுக்கும் அறிவிப்பது யாதெனில், இப்புத்தகம் வேண்டியவர்கள் திரிசிராப்பள்ளி, தி - சபாபதிபிள்ளையவர்களது புஸ்தகஷாப்பிலும், தஞ்சாவூர், புதுக்கோட்டையிலுமுள்ள ஷையாரது புஸ்தகஷாப்பிலும், திருநெல்வேலி மேலரதவீதியில் புஸ்தகஷாப் [illegible] உடையரான இராவுத்தரவர்களிடத்திலும், திருவனந்தபுரம் சாலையில் புஸ்தகஷாப்பு பெருமாள்நாயுடு அவர்களிடத்திலும் தமிழ், தெலுங்கு, சமஸ்கிருதம், வைத்தியம், ஜோதிஷமுதலிய, பலவித புஸ்தகங்களும் விலைசகாயமாய் பெற்றுக்கொள்ளப்படும்.

இப்படிக்கு

தி. ச. காத்தபெருமாள்பிள்ளை.





சிவமயம்

செந்தூரம்

# முந்நூற்றினட்டவணை.

—(*)(*)(*)—



அட்டவணை முற்றிற்று.

உ

சிவமயம்.

அகஸ்தியமுனிவரருளிச்செய்த

# செந்தூரம்.

## முந்நூறு.

---

காலுந்தலையுங்கலந்துநடுவாகிநின்று
மேலுந்துரியம்விளங்குமே காலாம்
வயித்தியமுந்நூறும்வழங்கவேசூத்திரம்
பயிற்றுங்கணேசனருட்பார்.

### காப்பு.

[illegible]பொதிகைதனில்வாழும் பூரணமேயென்குரு
வேதியென[illegible]தவத்தால்அஷ்டசித்தியெட்டும்பெற்றவரிசையி
[illegible]சொல்வேன், போதகத்தின்முகத்தானைக்
க[illegible]க்கோட்டானைபுழுக்குழியிலவிழுந்தானைப்புதல்வன்றன்னை, சாத
கமாய்[illegible]றாய்நின்ற கணபதிகாப்பாமே.

### நூல்.

கணபதியின்பதத்தாலே, கீழ்முக்கோணங் கரையடங்காப்பிறப்ப
நுப்பான்கடவுளான, கணபதியைக்குண்டலியிற் கண்டுதேறி கனலெ
ழுந்துவாய்வுவந்தபுரியஷ்டத்தால், கணபதியேபிறப்பிறப்பு ஆண்பெ
ண்ணாகிக்கரைகொள்ளாநாதமொடுவிந்துவாகி, கணபதியைப்பெற்றெ
டுத்தவிந்துவாலே கழறுகின்றவிருகுறியுங் காணுங்காணே. (உ)

காணப்பாபுரியஷ்டமெட்டினோடுகலந்துதப்பாபூரணந்தான்கண்
டத்தோடே, தோணப்பாயிடகலைக்குச் சோடசமேபாயுஞ் சுகமாகப்
பின்கலைக்குப்பன்னிரண்டாம், பேணப்பாயிதில்விட்டகுறையினாலே
பெண்ணோடுபுருஷனங்கே சேரும்போது, ஊணப்பாபிரணவங்கொ
ண்டுயர்ந்தசென்மம் உத்தமனேயிதிற்பிறந்த நோய்கள்தானே. (௩)

தானென்றசபையெழுத்து தொண்ணூற்றும் தத்துவமாமிவர்களுக்குப்பஞ்சகர்த்தாள், தானென்றேகொண்டணைக்குந் தசமாம்வாய்வுசாதகமாயபானனுட தத்துவந்தான்,தானென்றுநின்றவிடம்வாதம்பித்தஞ் சார்ந்தசிலேற்பனத்தோடு மூன்றினாலே, தானென்றவியாதியெல்லாம்வளருமப்பா சடலமெல்லாம்நோயிட்ட கூடுதானே, (ச)

கூடுகெட்டிக்குடியிருந்தகுறும்பரேகேள் கொள்ளையிட்டார்கற்பமெல்லாங்கூறாய்த்தின்ன, நாடுமப்போதொன்றேடேயொன்றுவேறாய்நடைகொடுக்க மாட்டாமல்கற்பந்தின்றால், தேடுமப்போசிவயோகஞ்செய்யவேணும் தெளிவாகவாதசித்திகாணவேணும், ஆடுமப்போகாயசித்திபண்ணும்போது அதற்குமுன்னேபயமிறுத்துதட்டுறேனே

அயக்காந்தக்கற்பம்.

தட்டுறேமென்பதற்குக்கற்பங்கேளு சாதகமாய்காந்தமதுபலந்தானஞ்சு, தெட்டிறதோர்வெள்ளையது பலந்தானொன்று திரமாகக்காரமதுபலந்தானொன்று, ஒட்டிரதோர்சாரமதுபலந்தானொன்று உத்தமனேதாளகந்தான்பலந்தானொன்று, பட்டிடவேபூநீறுகழஞ்சியொன்று பாங்காகவெண்கரு வெள்ளெருக்கம்பால்வாறே, (ரு)

வார்த்துவைக்கச்சலமாகும் சலத்தைவிட்டு மாட்டுவாய்..து ஒன்றுமருந்துங்கூட்டி, சேர்த்திடுநீயரைத்திடுவாய்ரெண்டுசாமந் திரமாகப்பின்பதனைவில்லைசெய்து, போர்த்திடுவாய்வெய்யிலிலே உலர்ந்தபின்புபுகழானமூசையிலேயிட்டுமூடி, கார்த்திடுவாய்மேலோடுகொண்டுமூடிக் கைமுறையாய்சீலைமண் கணக்காய்ச்செய்யே. (எ)

செய்யப்பாஉலைமுகத்தில் துருத்திரெண்டு திறமாகவூதிவிடுஅமுகமட்டும், பையப்பாவெடுத்ததனையாறவைத்து பாங்காகப்பின்பொருக்காலமூகவூது, மெய்யப்பாபின்பதனைக் குகையில்வைத்து விளங்கவேபின்பொருக்கால்நன்றாயூது, அய்யப்பாகாந்தமது தராப்போல்நிற்கும் ஆஆஆகாந்தமது அருமைதானே, (அ)

அருமையென்றகாந்தத்தைக் குகையில்வைத்து அப்[illegible]
றுதிரம்அமுகவூதிற், பெருமையென்றகாந்தமது சத்தா[illegible]
பேச்சேதுருதமொருபலத்தைத்தாக்கி, கருமையென்றகாந்[illegible]
தித்தேறக் கருவளையில்வீரமுடன் காரங்கூட்டி, யுருமைமெ[illegible]
மதுபழச்சாற்றுலாட்டி யுலர்ந்துவாய்பணம்போலே வில்லை[illegible]

வில்லைசெய்தமருந்தெல்லாம் சமனாய்க்கொண்டு மீறியதோர்காந் தமதுஉருகும்போது, சொல்லுவேன்சத்துக்குச்சமனாய்த்தாக்குதுடியாகவொவ்வொன்றாய் கொடுக்கவாங்கும், அல்லவேசமனாகத்தாக்கிப் பின்பு அப்பனேஓடுகொண்டு மூடிக்கொண்டு, வல்லதொருகுகைய ழகாநன்றாயூது மகத்தானகாந்தமது வங்கந்தானே, (ய)

தானென்றகாந்தமதுசுயமாகச் சாஸ்திரமெல்லாம் படித்தாரருமையென்றே, நானென்றஆனுவத்தால் வெளியிற்போட்டேன் நாட்டாதேகள்ளரென்ற பிள்ளைக்கெல்லாம், வானென்றயியத்தைப்பதனம்பண்ணு வண்மையாய்தேவியுடநாதங்கேளு, வேனென்றஅயப்பொடிதான்பலந்தானஞ்சு வெள்ளையொடுதாளகமுஞ் சூதங்கூட்டே. (கக)

கூட்டியேசாரமொடு காரந்தன்னைக் குறியாகவதக்கியொருபலந் தான்பாரு, மூட்டுவாய்பூநீறுகழஞ்சியொன்றுமுந்தியதோர்வெண்கருவுநீராலாட்டி, மாட்டுவாயிருசாமம்அரைத்தபின்புவளமாகவில்லைசெய்துவெயிலிற்போட்டு, நட்டுவாயுலர்ந்தபின்புமூசைக்குள்ளேநயமாகவைத்ததனைக்குகைவாய்மூடே, (கஉ)

மூடப்பாவோடுகொண்டு சீலைசெய்து முன்போலேயுருக்கியெடு வெண்கலமாய்நிற்கும், தேடப்பாமுன்போலே சோதித்தேறுசெகமெல்லாம் [illegible] ஆடப்பாயிதனுட்டுச் சித்தராட்டு ஆ ஆஜூாகமது கூடிற்றானால், வீடப்பாயிலத்துதடா பிறவியேதுமிதமிஞ்சுமென்றுசித்தர் மறைத்திட்டாரே, (கங)

மறைத்திட்டார் அயத்திறனுடுகாந்தந்தன்னை மக்களேயயமிருத்துத்தட்டுமென்று, குறைதிட்டாரறுசுவையுங்கழற்றுமுன்பே கொள்வதற்குமுதல் கற்பமென்றுகூறூர், நிறைத்திட்டே னுலகமெல்லாம் சித்தாய்ப்போக நிலையானஆறுவரையுறுதிசொன்னேன், முறைத்திட்டந்தப்பாமல் கற்பமேற முந்தவேயயக்காந்த மொழிந்திட்டானே.

மொழிந்ததொருஅயக்காந்தம் பலந்தானொன்றுமுத்தமிழ்தேர்புலத்தியனேவகையொன்றுக்குத். தெளிந்ததொருதங்கமது பலந்தான் ரெண்டு சேரவேமூன்றுமொன்று யுருக்கியாட்டு, கொளுந்ததொருக [illegible] பொடியாய்ச்செய்து கூட்டப்பாகண்டிடைக்குச் சவ்வீரத் [illegible] ந்ததொருரசமதிலே பனியிற்போடு மாட்டடாதங்கவிடை [illegible] (கரு)

[illegible] முறவாலைதன்னை நாள்மூன்றிற்றான் சுறுக்காகநித்தியமொரு [illegible] டி, நாகமுறமுலைப்பாலிலாட்டுவாட்டு ராப்பனியிற்போட்டு

விடுமூன்றுநாளாய், வாதமுமோவேதையிடும் வாதிக்கல்லோ வயித்தியத்தில்வாலைரச மார்க்கஞ்சொன்னேன், வேதைவிதிலோடாது ஆசியாதேவேதைக்குக் குருவேறே விளம்பக்கேளே, (கசு)

விளம்புவேன்வாலைரசங் கண்டிடைக்குமொட்டி மீறியதோர்கெந்திபிடுசிலைபத்தொன்று, வளம்பெறவேபொற்றலையின் சாற்றாலாட்டிவாசமாயிரண்டுநாளரைத்தபின்பு, உளம்பிலக்கக்குப்பியிலேயுலர்த்திப்பிட்டு உத்தமனேவாலுகையில் தீயைமூட்டு, தளம்பெறவேமூன்று நாள்முத்தீயிட்டு தப்பாதுதளமுறுசெந்தூரமாமே. (கள)

செந்தூரம்செகப்பென்ன முருக்கம்பூவோ் தேகத்துக்கழிவேது வயிரவனைப்பூசி, செந்தூரமெடுத்தடக்கிச் சிவனைப்பூசி தேவியொடுகணபதிக்குப்பூசைபண்ணி, செந்தூரந்தின்பதற்குத் தீட்சைக்குள்ளேசெயமாகக்கிரகலக்கினமுஞ் சொன்னேன், செந்தூரங்குன்றியிடைமூதண்டத்தின் திரமானலேக்கியத்திற் பொதிந்துதின்னே. (கஅ)

தின்னவேலேகியந்தான் முன்னேசெய்வாய் தீட்சையிருநூற்றுள்ளேதிடமாய்ச்சொன்னேன், மன்னவேலேகியத்தை தயாருஞ்சொல்லார் வளமாகக்கர்சிடை லேகியத்திற்கொள்ளு. உன்னவேமண்டலங்கொள்வயதுகண்டுஉத்தமனேரோகமென்றதெல்லாம்போகும்,அன்னமொடுபால்சீனிபத்தியந்த ன் அப்பனேமற்றொன்று மாகாவேறே.

ஆகாதுஎன்றுசொன்னேனே தமெதனரு லயிருந்துத்து ... குப்பத்தியமேவேணும், வாகானசெந்தூரம் நோய்கொண்டோற்குவளமானவனுபான மறிந்துகூட்டித், தாகானமண்டலமே குன்றிவீதம் சாதித்தால்நோயெல்லாம் தவறுண்டேபோம், பாகானபத்தியங்கள் காக்கவேண்டாம் பத்தியமாம்புகையிலையும் புளியுந்தானே. (உ0)

தாமென்றவொண்டும்விட்டுக் கொண்டாற்கேளு தவறாதுசகலவியாதிகளுந்தீரும், ஊனென்றவுடம்பெடுத்தால் சாகாக்கல்வி உத்தமனேயிதுவல்லோதளசெந்தூரம்,மானென்றபெண்களவலைக் குள்ளேசிக்கிமாள்வதற்கோ செந்தூரவைப்புச்சொன்னேன், தானென்றபேய்ச்சும்போய் தன்னைக்காணுஞ் சாதகமாய்லட்சியத்தின் குறிப்பைப்பாரே, (உக)

பாரப்பாவாசியினால் யோகமாகும் பரிவானதீட்சையினால்சித்தியாகும், காரப்பாசாபமெல்லாம்நிவிர்த்தியாகும் கற்பத்தில்முதற்கற்பமயக்காந்தம்கொள்ளு,சேரப்பாயதுசித்திபெற்றதெதினாலேசெந்தூரமயத்தாலேதெளிந்துகாணும், பேரப்பாகேட்டுடனே யெமதூதர்கள் பேசாதேயோடுவர்காண்பின்பாராதே, (உஉ)

பாராதேசித்தாந்தமொன்றுமில்லை பஞ்சகர்த்தாள்சடலமது வேகுமட்டுஞ், சேராதேயென்றுசொல்லும்வேதாந்தத்தைதெளிந்தறியமாட்டார்கள்சைவமாடு, கூராதேபூரணமென்றதெய்வக் கோவிலுக்குட்சுயம்புவஸ்துபராபரத்தை, சேராதேயிருப்பதென்ன வென்றுசொல்லிசெப்புகிறேன் சித்தாந்தந்தெளியாமாடே, (உ௬)

தெளிவானமனத்தோர்க்கு வாதுஞ்சொன்னேன் திடமற்றமூடருக்குத்திடமுஞ்சொன்னேன், தெளிவானபேர்க்கு வைத்தியமுஞ்சொன்னேன் செய்முறையிற்கற்பநெறி கூடவேண்டி, தெளிவானமானவர்க்குஞானஞ்சொன்னேன் சித்தியுடன்முத்திபெற யோகஞ்சொன்னேன், தெளிவானமகத்தோர்க்கு மவுனஞ்சொன்னேன் தீட்சையொடுபூசைவிதி செப்பினேனே, (உ௪)

செப்பினேன்வாதத்தி லட்சம்காப்பு திறமானவயித்தியத்தில்கொண்டுலட்சம், செப்பினேன்வாதத்தி லாயிரந்தான் தெளிவாகவிருகாண்டந்திரமாய்தேர்ந்து, செப்பினேன்சூத்திரந்தா னிருநூறப்பாதீட்சைவிதியிருநூறுந் தெளிவாய்ச்சொன்னேன். செப்பினேன்ஞானமாயிரந்தான்தேர்ந்து தெளிவாகஒருநூற்றில் திறந்திட்டேனே, (உரு)

திறந்திட்டேன்வயித்தியத்தில் குறுக்கிலட்சம்செப்பினேனதிறப்பாயிதனைத்தேர்ந்து, திறந்திட்டேன்வாதத்திற் சூஸ்திரம்போல் தெளிவாகவயித்தியத்தில்சூஸ்திரமேகட்டி, திறந்திட்டேனிவ்வண்ணமுந்நூறுந்தான்சிறுபிள்ளைக்காணுமவயித்தியந்தான், திறந்திட்டேன்பூரணசூஸ்திரந்தானப்பா செய்யிலிருபத்தோ ராயிரத்துஅறுனூறே.

நூறானயிருபதிதுஒன்றுநூறு நுகரவே அறுபத்துநாலுகாண்டம், வீறானயிதைக்குறுக்கிச் சூஸ்திரம்போலப்பா வெட்டவெளிபூரணசூஸ்திரத்தைச்சொன்னேன், கூறானயிருநூற்றுக்குள்ளேகேளு கொட்டினேன்சரிதையொடு கிரியையோடும், பேறானயோகமொடுஞானத்தோடும் பலத்தசூவாசந்தனிலே பேணிக்காணே. (உஎ)

[illegible] துறை வார்க்கத்தோர்க்கு கைவிட்டசூஸ்திரமா[illegible]ன், தோணப்பாகற்பத்திற் பத்துநூறுந் துடியா[illegible]ய்ச்சொன்னேன், பேணப்பாகற்பநூலிருனூரு[illegible]தொருமாந்திரியம் நூறுஞ்சொன்னேன், பூண[illegible]ந்திரசாலம் பூட்டினேனாயிரந்தான் புகழ்ந்து (உஅ)

பாரப்பாஅடிதொடுத்து கற்பங்கொண்டு பரிவாகஉண்டுவருங்காலந்தன்னில், சாரப்பாகாதமொடு பித்தத்தாலே தனித்தசிலேற்பனத்தாலேதாறுமாறுய், சூரப்பாபாராமல்கற்பங்கொண்டு சுழன்றுநீஅலையாதே நோய்கள்வரும்நேரம். காரப்பாசெந்தூரமினங்கள்தோறுங்கட்டாய்ச்செந்தூரித்துக் கடக்கவையே, (உகூ)

வையப்பாகற்பங்கள் கொள்ளுமுன்பே வகையானலேகியங்கள் சூரணங்கள், செய்யப்பாகிருதமொடுதயிலமோடு செய்துகொண்டுதிஷ்டியப்பாகருமத்தோடே, பொய்யப்பாவுரைப்பதென்ன புத்திசொன்னேன் புலத்தியனேயிதுக்குரைத்த வையித்தியந்தான், மெய்யப்பாவென்றோர்க்கு மெய்யேயாகும் விழலென்றாற்பொய்யாகும்விளம்பக்கேளே, (கூ0)

கற்பூரசலாசத்து.

கேளப்பாகற்பூரசலாசத்துத்தான் கெடியாகப்பலமொன்றுபொரிகாரந்தான், நாளப்பாபலமொன்றுரெண்டுங்கூட்டி நலமானபருத்திநீர்துத்திவேர்த்தோல், நீளப்பாபாங்காகக்கியாழம்செய்து நிசமாகவிட்டாட்டுஒருநாள்மட்டு, மாளப்பாஅஞ்செருவிற்புடத்தைப்போடு ஆறியெடுகல்வத்திலாட்டுத்தானே. (கூக)

ஆட்டத்தூளாகுமடாவெண்கருவைவிட்டு அரைத்துவில்லைசெய்சவியிலுலர்த்திக்கொண்டு, மாட்டவேஅஞ்செருவிற்புடத்தைப்போடு வாகாகஅரைத்துஅஞ்சுதரமுமாறல், நாட்டவேவெண்பொடியாய்பதனம்பண்ணு நல்மானபெருவயிறுமகோதரங்கள், ஊட்டவேநீர்செரிப்புக்கல்லடைப்பு ஓடுமப்பாவெடியுப்புச்சுண்ணநீரே, (கூஉ)

வெடியுப்புப்பலம்பத்துபூநீறுபத்து வேகமடாபழச்சாற்றிற்சாமமாயாட்டி, அடியிருப்புக்கரண்டியிலேவழித்துவைத்து அப்பனே கொதிக்கவைக்கச்சுண்ணமாகும், கொடியதப்பாபீங்கானில்நீரதாகும் கூறினேன்வயித்தியத்திலுப்புநீரே, துடியப்பாசலாசத்துத்தனக்குமுன்னே தோயப்பாஅதைதன்னைப்புடத்திற்போடே, (கூகூ)

போடப்பாவதுவல்லோவறுத்துவாங்கும் பொறிவந்துகற்பங்கள்கொள்ளும்போது, நாடப்பாதசவாய்வுபேதங்கொண்டு நச்சாம்பல் கொடியுதிரம்பெருத்துக்காணுங், கூடப்பாவிதுக்கல்லோகாரார்ச்சுன்

ணங் கொட்டினேன்சத்தோடே கூட்டிக்கொண்டு, சாடப்பாஉன்கை யிலேசத்துக்காரந் தடையறவேபுலிபோலேதாக்கும்பாரே, (௩௰௪)

அப்பிரகசத்து,

தாக்கிடவேஅப்பிரகசத்துசொல்வேன் சாதிப்பேனப்பிரகம்நவ நீதந்தான், வாக்கிடவேபலமொன்றுவெடியுப்போடு வளமானவெண் காரஞ்சாரமவெள்ளை, காக்கிடவேதாளகமுங்கெவுரிசூதஞ் சங்குமூடி தாரமுறுதாரசிங்கு, தேக்கிடவேபூநாகமுலர்ந்ததப்பா சேர்த்திடுவர் ய்வகைக்குமொருகழஞ்சிதானே, (௩௰௫)

கழஞ்சியடா பூநீறுபதினொன்றாகக் கட்டுமடாநவநீதத்தோடுங்கூ ட்டி, வழஞ்சியரைகல்வத்தில்வெண்கருநீராலே மாட்டிடுவாயிருசாம ம்வில்லைசெய்து, குழஞ்சுவிடவச்சிரகுகைக்குள்ளேவைத்துக் கூருக ச்சில்லிட்டுசீலைசெய்து, கழஞ்சுதடாஅஞ்சுதரமிளகப்பாரு தாக்குலை யிலூதிடவேசத்துமாமே, (௩௰௬)

சத்தடாசோதித்தால்மணியாந்தன்னைச் சதிராகச்சோதிக்கமரு ந்துகொண்டு, ஒத்தரசஞ்சத்திடைக்குச்சோதித்தேபாருஉத்தமனேச சிகைநிவள்ளிபோலேசயம், பெத்துதடாசூதத்தை பதைக்கைபிலே கொல்லும் பெரியோர்கள்நவநீதசத்துவிள்ளார், சித்திவருங்கற்பத்து க்குறுதிமெத்த சேரப்பாபுடத்தங்கஞ்செலுத்திடாயே, (௩௰௭)

ஆட்டிடுவாயப்பிரகசத்துத்தானே அப்பனேபலமொன்றுஉறுகு ம்போது, மூட்டிடுவாய்தங்கமொருபலந்தானப்பா மூசையிலேரெண் டுமொன்றாயுருக்கிவாங்கி, போட்டிடுவாய்கல்வத்திற்பொடிக்கத்து ளாம் புகழாகக்கண்டிடைக்குவீரம்போடு,காட்டிடுவாய்த்தங்கவிடை சூதம்வாரு கைமுறையாய்மூலைப்பாலிலரைத்துப்போடே, (௩௰௮)

போடப்பாநாளொன்றுக்கொருசாமந்தான் புகழாகமூன்றுநாள் பணிபிற்போட்டு, ஆடப்பாசுருளட்டைபோலேசூத மாகுமடாகெந்த கந்தான்ரெட்டிப்பிட்டு, தேடப்பாபத்திலொன்று சிலையுமிட்டுதீர்க்க மாய்ப்பொற்றலையின்சாற்றாலாட்டி, சூடப்பாரெண்டாநாளரைத்தபி ன்பு சுகமாகப்பொடிசெய்துகுப்பிற்சேற்றே, (௩௰௯)

ஏற்றியேவாலுகையிலெரிப்பாயப்பா என்சொல்வேன்மூன்றுநா ள்சென்றபின்பு, ஆற்றியேகுப்பிக்குள்சலாகையிட்டு அடியிலேகின்

டிப்பார்காரத்தாலே, வாத்தியேசெந்தூரம்பவளவர்னம் வாச்சுதடா காயசித்துவசமாய்ப்போச்சே தேற்றியேவிடுவனென்று தேகந்தன்னைச் சித்திபண்ணு முத்திபண்ணு திறத்தைக்காணே, (சூ0)

திறமானஅப்பிரகசெந்தூரந்தான்-செய்வதென்னஉறுதியொன்றுல்கற்பத்தாலே' நிறம்பெற்றதோஷங்கள் சயங்கள்மேகம்-நிலைகெட்டகண்மயக்கம்மையல்தாகங்,குறமானகுட்டங்கள்சாத்தியமாம்ரோகம்-குன்மங்கள்முகரோகம்முலரோகம், அறவானவாதபித்தஞ்சிலேஷ்பனத்தால்-அளவற்றநோயெல்லாமகன்றுபோமே (சூக)

அகன்றுபோமப்பிரகசத்தென்றுசொன்னல் - அப்பனேகற்பதத்தையுறுதிபண்ணு, விகண்டமேவாராதுவிஷமெல்லாம்போம் - வேண்படிகற்பத்தைத்தின்னுதின்னு,அகண்டமெல்லாம்நீயாச்சு மலைக்கவேண்டாம்அப்பனேவழலை தள்ளிக்கடுக்காய்கொண்டு, இகம்பெறவேமூலிகற்பங்கொள்ளும்போது-இனியில்லாநோய்களெல்லாமெதிர்க்குர்பாயே (சூஉ)

எதிர்த்துவரும்நோய்களெல்லாம்துரத்திவிட்டு· மிகத்தைவிட்டுப்பரத்துக்குள்ளாகப்பண்ணும், மதிக்கவருங்கற்ப மெல்லாம்வளமாயேற்றுமனம்நினைவையறிவோடே வளர்ந்தேயேறும், துதிப்புதற்குநாதஒலிகாதிற்கேட்குஞ் சொற்பெரியகுண்டலிக்குணந்திமீளுங்,கதிர்க்குளித்துஅப்பிரகசத்துத்தங்கங்-கண்டாயோசெந்தூரமாகையாலே,

நிமிளை.

ஆகாசநிமிளைசத்தைக்கேளுகேளு அப்பனேபொன்னிமிளைபலந்தானென்று, பாகானரோமமதுபலந்தானென்று - பழச்சாற்றிலூறவைத்துமூன்றுநாள்தான், வாகாகக்கழுவியதின்மேலேசுற்றி மைந்தனேஅரிதாரம்வங்கம்ரெண்டு, சாகவேபொன்னிமிளைமேற்பொதிந்து பின்பு சாத்தடாரோமத்தைச்சார்ந்துகேளே, (சூச)

கேளப்பாகுகைக்குள்ளேஅரைப்பலம்பூநாகங் கெடியாகவைத்ததின்மேல்மயூரததினிற்கும், வேளப்பாஅரைப்பலந்தான்பரத்திவைத்து, விள்ளங்கவேசொல்லுகிறேன் விதியைக்கேளு, வாளப்பாபொன்னிமிளைக்கலசம்வைத்து மாட்டடாவதின்மேல்கால்பலந்தான்காரம், நாளப்பாவதின்மேல் அரைப்பலம்பூரம் நன்றாகவதின்மேலேயரைத்திடுபூநீறே, (சூரு)

பூநீறுசழஞ்சியொன்றுமேலேதூவிப் பூநாகமறைப்பலந்தான் அதின்மேல்வைத்து, வேறுகக்குகை வாயிலோடுமூடி விரியாமல்

மண்சீலையஞ்சுசெய்து, தானாகவுலையில்வைத்துவூதுவூது சாந்தமாம் பொன்னிமிளேச் சத்துமாகும்,வானவர்கள்போற்றுமிந்த நிமிளேசத்து வளமானவெண்கலம்போல் தகரும்பாரே. (௬௬)

பாரப்பாநிமிளேசத்து சோதித்தேயின் பரிவானபொன்னிறமா யியமாகும், ஆரப்பாநிமிளேசத்து ஆருஞ்சொல்லார் அப்பனேவயித்தி யத்துக்குறுதியாகுஞ், சேரப்பாகற்பத்தால் வந்ததோஷம் தீருமடா நோய்களெல்லாம் படிதானென்றால், மேரப்பாபருப்பதம்போற் பஞ் சுவைத்து மிளகதுபோற்றீயைவைத்த கதைபோலாமே. (௬௭)

## நிமிளேச்செந்தூரம்.

போமென்றநிமிளேசத்துப் பலந்தானொன்று பூட்டடாமூசையி லேயுருகும்போது, ஆமென்றகருநாகம்பலந்தானொன்று அப்பனேத ங்கமதுபலந்தானொன்று,சாமென்றேன் தங்கமொடுவங்கம்ரெண்டுசா தகமாய்க்கல்வத்திற் பொடிக்கத்தூளாம், வேமென்றேன்வீரமதுபல ந்தானுலு மேலானமுலைப்பாலை விட்டுஆட்டே. (௬௮)

ஆட்டையிலேகோழிமலம்வெள்ளேகேளு அப்பனேகால்பலந்தா ன்கூடப்போட்டு, மூட்டையிலேவாலைரசம்சவ்வுப்போலாம்முறையா னசூதம்ரெண்டுபலமேவாரு, மாட்டையிலேமூன்றுநாள்பனியிற்போ ட்டு மறுபடியுங்கெந்தகந்தான் பலமீராறு, கூட்டையிலேபொற்றலைபி ன்சாற்றாலாட்டிக் கொடியசிலைக்காற்பலமுங் கூடப்போடே. (௬௯)

போட்டிடுவாய்வில்லைசெய்து ரவியிற்றானே பொடிசெய்வாய்பி ன்பெடுத்துக்குப்பிக்கேற்றி, நாட்டிடுவாய்வாலுகையில் மூன்றுநாள் தான் நலமாகமுத்தீயும் நன்றாயிட்டு, மூட்டிடுவாய்சலாகைகொண்டு சோதித்துப்பார் முனையிலேகரகரக்கும்பதந்தானப்பா, கூட்டிடுவாய் குப்பிதனையுடைத்துவாங்கு குய்யசிவப்புறுநிமிளைசுருக்குத்தானே,

சுருக்கானசெந்தூரம் நிமிளையாச்சு சொல்லக்கேள்ஒருபோதுகு ன்றியுண்ணக், கறுப்பானஆவின்பால்தன்னிற்கொள்ளக்கண்விழித்து மூடுமுன்னேபிணமும்பேசும், வெறுத்தானேசடலத்தைக்'காலநப்பா மெய்யுளேச்சல்பொருத்துளைச்சல்சதைக்குள்தோஷம், முறுக்கானவி ஷக்கடிகள் விடத்திற்குஷ்டம்முசுவாதமேகமென்றதெல்லாம்போமே

போமடாவாதத்தில்வந்ததோஷம் போகுமடாபித்தத்தால் வந்த தோஷம், மாமடாசிலேஷ்பனதொல் வந்ததோஷ மல்லாந்தான் நிமிஷசத்தைக்கண்டபோதே, நாமடாவுனக்கெதிரோவென்று நோய்கள் நாட்டிலே யெவரிடத்துஞ்சேரப்போனல், காமடாநிமிஷயங்கேகண்ணுற்பார்த்தால் கட்டோடேகடல்புக்குங் கதியில்லாதே. (ருஉ)

இல்லாதேயிருந்துகொண்டு கற்பங்கொண்டா லிலட்சியத்திலறிவோடேவாசிபார்த்து, வல்லமையாய்சாதிக்கும் யோகசித்தி வளமானகுளிகைமுதல் மந்திரதீட்சை, நல்லதொருபூசைவிதி யமுர்தலேகியம் நலமானவாதமொடு பிலக்கக்கண்டு, செல்லுவாய்பின்பங்கேசித்தரோடே சேரலாங்கைகொள்வார் திறத்தைப்பாரோ, (ருங)

திறமானவயித்தியத்தைச் சொன்னேனப்பா திறங்கெட்டலோகர்க்கோ செப்பினேன்கே, ளுறுவாதரசவாதத்துள்ளழுந்திப்பின்னே உத்தமனேயினசாரி சரக்குச்சேர்ந்தால், நிறுவிக்கும்வயித்தியந்தான் வாதிக்காகும் நேரானகால்சித்திசமதாகும், விருதடாபேசியேலோகத்தோர்கள் வேரோடேவயித்தியமெல்லாம் வருமென்பாரோ, (ருச)

தாளகநீறு,

பாரப்பாபுலத்தியனே அய்யாகேளு, பாங்கானதாளகத்தி னீறு சொல்வேன், சேரப்பாதாளகந்தான் பலந்தானென்று திறமானகல்சுண்ணத்துள்ளேவைத்து, சாரப்பாஅமரிபடி விட்டுநீற்றுத் தாளகந்தான்சுத்தியதாம் ரெண்டுபத்தில், வேரப்பாபழச்சாறு படிதானூட்டு வெள்ளைச்சிமுலைப்பால் தான்படிகாலூட்டே. (ருரு)

ஊட்டியபின்அரிதாரம்பேராமுட்டிச்சா றூத்தியேயரைத்திடுவாய்ரெண்டுசாமம், ஆட்டியபின்வில்லைசெய்து ரவியிற்போடு அப்பனே மூன்றுநாள்காய்ந்தபின்பு, கூட்டியதோர்செருப்புக்கால் படியின்சாறுகொட்டுவாய்குகைக்குள்ளே புரசஞ்சாம்பல், நாட்டியேமேல்மூடிச்சீலைசெய்து நயமாகரெண்டெருவிற் புடத்தைப்போடே. (ருசு)

சூதபற்பம்.

புடம்போடத்தாளகந்தான்வெளுத்துநீறும் பேசாதேதாளகத்தின்வெள்ளை தன்னைத், திடம்பெறவேசிமிளுக்குப்பதனம்பண்ணுசெப்பக்கேள்சூதபற்பந் திறமாய்ச்சொல்வேன், அடம்பிலையுங்கடம்பிலையும்சிறுபுட்காலும் அப்பனேவகைக்கொரு படிச்சாறுக்குள், விடம

திட்டுவார்த்ததிலே கரந்தைச்சாறு விளங்கவேபடியொன்று அதினு ள்வாரே. (௫௭)

வார்த்திடுவாய்முன்புசெய்யும் வரிசைகேளு வாகானகாட்டுள்ளி க்கிழங்குச்சாறு, சேர்த்திடுவாய்கார்த்திகையின் கிழங்குச்சாறு சேர வேபண்ணுங்கோல்மூலிச்சாறு, ஏர்த்திடுவாய்வகைக்குமொருபடிசா றாக எடுத்தல்லோசூதமொரு பலத்துக்குத்தான், பார்த்திடுவாய்காந்த சத்தின்கிண்ணத்துள்ளே பசையாமற்சாகுமடாசுருக்குத்தாக்கே. ()

சுருக்கிட்டபின்பெடுத்துச் சூதந்தன்னைத் துடியாதகல்வத்திலிட் டுக்கொண்டு, வெறுத்திட்டமுன்சாற்று லரைப்பாயப்பாமெழுகுபோ லாகிவரும்வில்லைசெய்வாய், உருக்கிட்டரவியிலேகாயப்போடு உத்த மனேகுகைக்குள்ளே வைத்துமூடி, வெழுக்கிட்டசீலைசெய்து புடத் தைப்போடு வெளியிலேபரைபூசை விளம்பச்செய்யே. (௫௯)

செய்யவேதேவியங்கே வார்த்தைசொல்வாள் திடமானசூதபற்ப ம்வாய்ச்சுதென்பான், பய்யவேஅஞ்செருவிற் புடத்தைப்போடு பாங் காகரசவெள்ளை ரசகற்பூரம், மெய்யவேகற்பத்தால் கூட்டமீறில்விஷ நீரால்குறைநோவுகண்டுதானல், மையவேசூதபற்பங் குன்றிதானும் மகத்தானதாளகத்தின் பற்பங்கூட்டே. (௬௰)

அனுபானலேகியம்.

கூட்டுவாய்குன்றியிடை யிரண்டுங்கூட்டிக் கொள்ளுவாய்நூறு ண்டின்வேப்பம்பட்டை, நீட்டுவாய்பலம்நூறு வெள்ளாட்டெச்சம் நிசமாகஅஞ்சுபத்து பலமேசேர்த்துக், காட்டுவாய்ப்பூத்தயிலம்வடித் துவாங்கி கருவானவீழிவேர்ச் சூரணமேசெய்து, மாட்டுவாய்செருப் புக்கால்தனிச்சாறாக, வாங்குவாய்படிநாலு மதனில்வாரே. (௬௧)

வாரப்பாபனைவெல்லம் பலந்தான்பத்து மருவியேகரைத்திடுவா யடுப்பிலேற்றிச், சேரப்பாகமலத்தீயாகமூட்டு செப்பினதோர்வேம்பி னுடதயிலந்தன்னைக், கோரப்பாபடியொன்று கூடவிட்டுகொட்டவே வீழிசூரணத்திலேடு, சாரப்பாபடியாரை தான்புங்கம்பூவுந் தனிச்சூர ணத்தொடரைப்படிதான்போடே. (௬௨)

போடப்பாமிளகுசுக்கு ஓமங்காயம் புத்தோடுத்தொட்டியொடுசி ராம்புஏலம், ஆடக்கேள்சிரகமுமதுரமோடு அப்பனேவகையொன்று

கழஞ்சியொன்று, நாடக்கேள்கார்கோலரிசிபம்பாலு நாட்டடாபறது றுங்கியுடபட்டைபலநாலுஞ், சூடக்கேளிளவறுப்பாய்சூரணமேசெய் சூரணமெல்லாமொன்றாய் சூட்டிவைவே. (௬௩)

வைத்தபின்புகாரொள்ளுப் பலந்தானஞ்சு மருவியிடிசெங்கொட் டைப்பலமிரண்டு, நைத்தபின்புசூரணத்தைப் பிசைஞ்சுகொண்டுநல மானபாகுசெய்து வருமந்நேரம், பொய்ததல்லசூரணத்தை யதிலே போட்டு பூணவேதேனுமொருபடிதான்வாரு, மெய்ந்திடவேஆவிநெ ய்படிதான்வாரு மெழுகுபதம் ஆம்போதேவழித்துவாங்கே (௬௪)

வழித்துவைத்துபிங்காணுக் குளளேநீதான் வாகாகத்தினமொன் றுக்கிருநேரந்தான், கழிப்பாகலேகியத்தைக் கழஞ்சிவீதம்கர்த்தாவை மனதுக்குள் தியானம்பண்ணி, யொழித்திடவேமுன்சொன்னபற்பங் கூட்டி உண்ணவேமண்டலந்தான் புளியாகாது, கழிப்பானபுகையிலை யும்வழுதலங்காய்விட்டு தகையாகப்பாலுப்பைச் சத்தைகூட்டே,

கூட்டவேபதினெட்டுக்குஷ்டமெல்லாங்குடிப்போமென்று சொல்லிச்சட்டைதள்ளுந், தாட்டோட்டுசாராது பத்தியந்தான்தப்பி ல்சள்ளுமடாதாளகமுஞ்சூதபற்பம் வீட்டோடேயிருந்துபின்புபத்தி யங்காத்தால்வெகுசுருக்காய்கேட்குமடாசூதபற்பம், பாட்டோடுதுன் பம்விட்டுத்துயரநீக்கிப்பரிசினந்தின்வேதையைப்போல்தேகமாமே.

அண்டச்சத்து.

ஆமப்பாஅண்டோடு பலந்தானொன்று அப்பனேசூதமொடுகார சாரந், தாமப்பாகெவுரிவெள்ளை யரிதாரந்தான் சாதகமாய்மிருதாரசி ங்கியோடு,போமப்பாவகையொன்று கழஞ்சுரொண்டு புதிதானகல்வத் திலரைக்கக்கேளு, நாமப்பாவெண்கருநீர்விட்டுஆட்டுநலமாகச்சாமம் ரொண்டுவில்லைகட்டே. (௬௭)

கட்டியபின்ரவியிலே மூன்றுநாள்தான் காய்ந்தபின்புகுகைக்கு ள்ளேவைத்துமூடி, ஒட்டியபின்சீலைசெய்து உலையிலூது உத்தமனே ஒருமணியாய் நிற்கும்பாரு, வெட்டிணியாமண்டோடு வெண்கலம் போலாகும்விள்ளார்களுபசாரத்துக்காதியப்பா, அட்டியில்லையண்ட சத்தைச்சோதித்தேதான் அப்பனேயியந்தான் பலந்தான்தூக்கே.

தூக்கப்பாசமனுகத்தங்கந்தன்னைத்துடியாதவிரண்டுமொன்றாயு ருகும்போது, தாக்கப்பாசூதமொருபலத்தைவாரு தப்பனையைச்சார்

பமதுவிழுங்கும்வாரும்,போக்கப்பாநாகமொருபலத்தைப்போடுபோட்டபின்புவீரமொருபலந்தான்போ - வரக்கப்பாலிங்கமொருபலந்தான்போடு-மருவிநின்றுஉருகுமடாகளங்கமாச்சே (௬௯)

ஆச்சப்பாகளங்கத்தைக்கலவத்திட்டு - அடங்காதகெந்தகந்தான்ரெட்டிபயிட்டு,வாச்சப்பாபத்திலொன்றுசிலையுமிட்டு -வாகாகக்கற்றாழைப்பாலாலாட்டு, வீச்சப்பாநாளொன்று பொற்றலையின்சாற்றால் விளங்கவேரெண்டுநாளானபின்பு, பாச்சப்பாவில்லைசெய்துர வியிற்போடு பாங்காகமூன்றுநாள்காய்ந்தபின்பே (௭௰)

காய்ந்தபின்புகுப்பியிலேசெலுத்திக்கொண்டுகருணைபெறவேணுமென்றேவாலுகைக்கெந்திரம், வாய்ந்ததோர்முத்தீயுமூட்டுமூட்டுவளமாகநாலாநாள்குப்பிவாங்கு,சாய்ந்ததொருஅருணனைப்போற்செந்தூரந்தான் சாதிக்குமெதிராளியெதிர்க்கமாட்டான், ஆய்ந்தமொருஅண்டத்தின்வங்காக மடர்கழுஞ்சிதருகெந்திபருளைப்பாரே. (௭௧)

அருளானகற்பங்கள்கொள்ளும்போது அடங்காததாகமொடுநீரிரக்கம்,மருளானமயக்கமொடுகன்னிமையல்வாதத்தினாலெழுந்தசுவாரோகம், சுருளானமந்தாரகாசமோடு சுவாசகாசத்துடனேசதையில்தோஷம், கருவானகற்பத்தால்கலந்தநோய்கள்கண்காணாதோடுமப்பாகண்டுபாரே. (௭௨)

க்ஷயரோகத்துக்கு லேகியம்.

கண்டுகொள்ளுமண்டலத்தின்செந்தூரந்தான் கலைக்குமடாநாடியெல்லாமிறுகுந்தேகம், மொன்றுவிடுகுன்றியிடைப்பனைவெல்லத்தில் உத்தமனேஒருபோதுகொண்டாற்போதும், மண்டுகின்றக்ஷயரோகமிஞ்சித்தானல்வகையொன்றுசொல்லக்கேளாடாதோடை,பிண்டுசங்குதூதுவளைமுருக்குமுல்லை யிளந்துளசிகண்டங்கத்திரியாமென்னே.

என்னவேமூலிகைதான்வகையொன்றுக்கு இடித்ததொருசாறப்பாபடி வீதந்தான், சொன்னசொன்னமூலியுட் சாற்றை யெல்லாம்தோணவேபனைவெல்லம்பலமூன்று, அன்னவேயடுப்பில்வைத்துக்காயும்போது அரத்தையொடுதிரிகடுகுதிரிபலாதி, மின்னவேகற்கண்டுவசம்பிறைவிளங்கவேவகையொன்றுபலந்தான்றொண்டே (௭௪)

பலமானதொருபலந்தான்நெற்பொரியுங்கூட்டிப் பாங்காகமருந்தையெல்லாஞ்சூரணித்து, செலமானபாகெல்லாம்பாகஞ்சேரில் திட

மானதூரணத்தையதிலேபாய்ச்சி, பிலமானதேனதிலேபடிதான்வாரு பேசாதே ஆவின்நெய்படிதான்வாரு. குலமானலேகியமாம் வழித்து வைத்து கூசாதேபீங்கானிற்பதனம்பண்ணே (எரு)

பதனமாய்வைத்திருப்பாய்லேகியத்தைப் பாங்கானகழஞ்சிநிறை யெடுத்துக்கொண்டு, சுதனமாயண்டத்தின்செந்தூரத்தை சுருக்காகக் குன்றிவிடையொருபோதுண்ண, விதனமெல்லாமொழிந்துதடாக்ஷய ரோகங்கள்வேரோடேஅறுத்துதடாஉபரசத்தின்வேகம்மதனகாமே சுரமாம்விந்துகட்டும் மங்கையரைத்தோய்ந்தாலும்வாகாதென்னே.

கிருஷ்ணஅப்பிரகநவநீதம்.

வாராதுகிருஷ்ணஅப்பிரகந்தன்னை வாய்ப்பாகநவநீதமாகச்செய் து, போராதுபலமொன்றுவாங்கிக்கொண்டு பிலத்தவெடியுப்புடனே காரஞ்சாரஞ், சாராதுசீனமொடுமூடன்கூட்டித் தயவானகல்லுப்புவ கையொன்றுக்கு, வாராதேகழஞ்சியொன்றுகூடப்போட்டு வாகானப ழச்சாற்றாலொருநாளாட்டே. (எஎ)

ஆட்டியபின்வில்லைசெய்துஉலரப்போட்டு ஐம்பதெருக்குள்ளே தான்புடத்தைப்போட்டு, மூட்டியபின்பெடுத்ததனைக்கல்வத்திட்டு மு ழுங்கவேகர்ப்பூரவல்லிச்சாற்று, லூட்டியபின்னரைத்துவாய்பலந்தா ன்கெந்தி உரப்போடுநாளொன்றுசென்றால்வில்லை, காட்டுவாய்ரவிமு கத்திலுலர்ந்தபின்பு கட்டக்கேள்ஐம்பதெருக்குள்ளேபோடே. (எஅ)

போடப்பாபுடமாறியெடுத்துக்கொண்டு புகழாகப்பழச்சாறுகல் வத்திட்டு, ஆடப்பாநாளொன்றுஅரைத்துவில்லை அப்பனேயரைத்து முன்போற்புடத்தைப்போடு, தேடப்பாஆறினபின்கல்வத்திட்டு திட மானகுட்டித்தக்காளிச்சாற்றாற், கூடப்பாநாளொன்றுஅரைத்தபின் பு குழறவேவில்லைசெய்துபுடத்தைப்போடே. (எகூ)

புடமாறியெடுத்ததனைபெருக்கம்பாலாற் பேசாதேநாளொன்று அரைப்பாயப்பா, திடமாகவில்லைதனைஉலர்த்திக்கொண்டுசிறப்பாகமு ன்போலேபுடத்தைப்போடு,நடமாடுபின்பொருக்கால்பழச்சாற்றாலே நலியாதேதினமொன்றுஅரைத்தபின்பு, உடனுடுசெத்துருவாங்காரஞ் சாரம் உத்தமனேதனுக்கெல்லாந்தின்றவாரோ (அம)

வாறுடனேகறுத்திருந்ததேவிநாதமாண்டுதடாகனபுட்மால்மூட்டுமூட்டு, கூறுடனேஅப்பிரகநவநீதத்தைக் கொன்றவனுர்வயித்தியத்திறகொட்டினேனுன், வீறுடனேசெந்தூரம்நன்றாகாட்டால் விளங்கவேபொற்றலையின்சாற்றாலரட்டித், தேருடனேநூறெருவில்புடத்தைப்போடுசெந்தூரமாகுமடாசெப்பக்கேளே. (அக)

கேளப்பாஅப்பிரகசெந்தூரத்தைக் கெடியாகத்திரிகடுகுதன்னிற்கூட்டி, வாளப்பாதேன்நெய்யுங்கலந்துகொண்டு மருவியசெந்தூரமிதுகுன்றிகூட்டி, கேளப்பாகற்பத்தால்வந்ததோஷங் கூட்டோடேபோகுமப்பாபத்துநாட்கொள், ஆளப்பாஉதிரத்தில் வாயுவெல்லாம் அபானத்தின்கீழ்வாசல்புக்கிப்போச்சே, (அஉ)

போச்சப்பாமேகமென்றதெல்லாம்போகும்பூண்டதொருநீரிரக்கம்போகுமப்பா, ஆச்சப்பாசிந்தியுடசக்கரையினாலேஆச்சரியம்அஸ்திசுரம்தோஷமில்லை, போச்சப்பாநாடிகளில்தோஷமில்லை பிரபலமாய்த்தேகமெல்லாம்குளிர்ச்சிபண்ணு, வாச்சப்பாவயித்தியத்திற்சக்கரையேசெல்லார்வாய்ப்போச்சேவயித்தியந்தான்வணங்கிக்கேளே ()

வணங்கியேநீகேளுபுலத்தியனேஅய்யா மாறாட்டமில்லாமல்சர்க்கரையைச்சொல்வேன், குணங்கியேபோகாமல்பருத்துண்டாகக்கொண்டுவந்துநிழலுலர்த்திக்காய்ந்தபின்பு,பிணங்கியேபோகாமலிடித்துத்தாளாய் பிலமாகவடிகொண்டுசூரணித்து,மணங்கியேபொடிப்படிதானொன்றுக்குள்ளே வாசமாய்நாலுபடிசலத்தைவாரே. (அச)

வார்த்திடுவாய்மறுநாளிலிருத்துப்போட்டு மறுபடிரிஞ்சலமதிலேமுன்போல்விட்டு, கோர்த்திடுவாயிப்படியேபத்துவண்ணங்கூறாகச்செய்தபின்புசொல்லக்கேளு, பார்த்திடுவாய்புளித்ததொருகாடிக்குள்ளே பழச்சாறுபதினாறுக்கொன்றுவாறு, சேர்த்திடுவாய்முன்போலேயிறுத்துப்போட்டுத் திறமாகமறுபடியும் செய்யக்கேளே. (அரு)

கேளப்பாபுலத்தியனேசிந்தியுடகைப்புக்கெட்டதில்லைசித்தரல்லோசெயஞ்செய்வோர்கள், ஆளப்பாவாயிலிட்டாலண்டவரைமட்டுமாகாகாகைப்பென்றால் வேப்பங்காயீடோ, வாளப்பா வயித்தியனேவென்றுசொன்னேன்வாதிக்கல்லோவுரைத்தமார்க்கமல்லோ,ஆளப்பாஆவின்மோர்படிநாலுக்குள் அப்பனேகால்படிதான்பழச்சாறாட்டே. ()

*சர்க்கரை-சீந்திசர்க்கரை.

பழச்சாறுவிட்டபின்புஒருபடியாம்பொடிக்குப் பாங்காகக்கரைத்துவைத்துமறுநாள்கேளு,பழச்சாறுவிட்டமோரிறுத்துப்போட்டுப்பாலாவின்பால்படிக்குப்பொடிபடிதான்போடு,இழிச்சதல்லவங்காளச்சீனிகேளுவென்சொல்வேனரைப்படிதான்சீனிபோடு, தழச்சுதப்பாரவியிலேயுலர்ந்தபின்பு தானமிர்தசக்கரையாமென்றுகாணே. ()

காணப்பாவிப்படியேசர்க்கரையைச்சொல்லார் கைகண்டசித்தரென்றால்பிழைக்கச்சொல்வார், வீணப்பாமற்றதெல்லாம் சர்க்கரையேஅல்ல வீறுகின்றகைப்பதனையடக்கமாட்டார், தோணப்பாசர்க்கரையைவாயிற்போடச் சுருக்கடாஅஸ்திசுரமெல்லாம்போகும், பூணப்பா இதினோடே மருந்துகூட்டப் புகலுவேன்புலத்தியனே கேளுகேளே. (அஅ)

கேளப்பாதிரிகடுகுமதுரவேரமங் கெடியானவாய்விளங்கம்நறுக்குமூலங், கேளப்பாகர்ப்பூரம்குங்குமப்பூ கிராம்புடனேசீரகங் கோரோசனைகஸ்தூரி, கேளப்பாசாதிக்காசாதிப்பத்திரி கிருபையுடன்வகையொன்றுபலந்தானென்று, கேளப்பாஇளவரையாய் சூரணித்துக்கிருபையுடன்சொல்லக்கூவிளத்தின்பூவே (அகூ)

பூவதனைநிழலுலர்த்திச்சூரணித்து பூட்டிடாய்சமனாகச்சீனிக்காலாய், பூவதனைச்சேகரித்தசூரணந்தான் புகழமுர்தசர்க்கரைக்குநாலுக்கொன்றாய்ப்பாவதனைக்கலந்துகொண்டுபதனம்பண்ணு படுபாவிமேகசலம்பறந்துபோகும், ஆவலுறலேகியமாய்ச் செய்யக்கேளு; அப்பனேதாழைவிழுதுசாறுவாங்கே, (கூ௰)

வாங்கியேபடிநாலுபுதுச்சட்டிக்குள் வாரப்பாபடிநாலுஇளநீருந்தான், தேங்கியேசெண்டுமொன்றாய்க்கிஷாயஞ்செய்ய செப்புவேன்குருவிஞ்சுபலந்தானென்று,வோங்கியேசிறுபுட்கால்பலந்தானென்று உத்தமனேயிஞ்சிபத்து பலந்தானென்று, தாங்கியேநன்னாரிப்பலந்தானென்று சாந்தமாபேலமதுபலந்தானென்றே. (கூக)

ஒன்றாகவிதுவெல்லாயிடித்துப்போட்டு ஒருபடியாயிறுகியபின்னதிலேகேளு, நன்றானசீனிபலம்நாலுபோடு ரசபாகம்வருநேரந்தன்னிலேதான், வென்றதொருஅமுர்தசஞ்சீவிதன்னைமேவியரைப்படியா

ப்படியளந்துவதிலேபோடு, கன்றுனஆவின்நெய்படிகால்வாரு கலங்காதே நெய்யிற்பாதிதேனைக்கொட்டே. (கூஉ)

கொட்டியபின்மெழுகுபதந்தன்னிலேதான் கூறுனபீங்கானிலவ்ழித்துவைப்பாய், வெட்டினேன்தேகத்துள்நோய்களெலலாம் விடயமிட்டுவிடயமிட்டுச்சோதித்தேதான், அட்டியாய்சொல்வதிந்த அமுர்தலேகியம் அப்பனேஆருக்குஞ்சொல்லவில்லை, மட்டில்லாவயித்தியந்தான்சாஸ்திரமுஞ்சொன்னேன் மாருட்டமில்லைஒன்று மிதுக்கொவ்வாதே. (கூ௩)

ஒவ்வாதலேகியத்திற்கழஞ்சித்தூக்குஉத்தமனேஅப்பிரகசெந்தூரத்தைச், செவ்வாகக்குன்றியிடைதிறமாய்க்கொள்ளுதேகத்தில்மேகசுரமேகவெட்டை, கவ்வாக அஸ்திசுரம்வேகம்போகுங் கபாலத்தில்வெட்டைசுரம்குஷ்டம்போகும், இவ்வகைதான்பத்துநாள் கொள்ளும்போது எமனாலும்வெல்லரிதுதேகந்தானே. (கூச)

பவளவங்கச்செந்தூரம்,

தானென்றபவளவங்கச்செந்தூரங்கேளு சார்வானவங்கமதுபலந்தானொன்று, கானென்றநற்பவளம்பலந்தானொன்று கைமுறையாய்சிலாசத்துப்பலந்தானொன்று, வேனென்றபழச்சாற்றால் மூன்றுநாள்தான் விடிகாலைமாலைரெண்டுசாமமாட்டி, கோனென்றவில்லைசெயது ரவியிற்போட்டு கூறுகஉலர்ந்தபின்புபுடத்தைப்போடே. (கூரு)

போட்டெடுத்துநாலிலொன்றுகெந்திகூட்டிப் புகழானபொற்றலையின்சாற்றாலாட்டி, மீட்டெடுத்துவில்லைதனைஉலர்ந்தபின்பு வெகுசுருக்காயைம்பதெருப்புடத்தைப்போடு, மூட்டெடுத்தகருவங்கஞ்செந்தூரந்தான் மோசமில்லைமுக்கனும்புடத்தைப்போடு,சூட்டெடுத்துப்பொடிசெய்துபதனம்பண்ணு துடியாகக்குன்றியிடைகொள்ளு கொள்ளே. (கூசா)

கொள்ளடா அமுர்தசஞ்சீவிதன்னிற கொண்டபின்புசலக்கழிச்சல்கடுப்புரத்தம், விளளடாகுறியெறிப்புலிங்கப்புற்று மேகத்தினலெழுந்ததோஷமெல்லாம், வெள்ளடாஅனுவளவுகறபத்தாலே வெளுத்ததொருமேகசலமுறிந்துபோச்சு, தள்ளடாஎன்னுணை வாசிகொண்டு சாற்றடாயண்டலந்தான்சித்தியாமே. (கூஎ)

அயச்செந்தூரம்.

ஆமப்பாஅயத்தகடுபலந்தானொன்று அப்பனேஅந்திடைக்குச்சூதங்கூட்டி, வேமப்பாகல்வத்திலாட்டிஆட்டி வீரமொடுநவாசாரம்பல

ந்தானென்று, வாமப்பாமூன்றுநாள்கைவிடாமல் மாட்டியரைப்பொ டியாகச்சிவந்துபோகும்,மோமப்பாபுதுச்சட்டியுடுப்பில்வைத்துமோ சங்கள்வாராமல்வறுத்திடாயே. (சுஅ)

வருகைகையிலேபதம்பாருமுருக்கம்பூப்போல் வர்ணமிட்டபதத்தோ டுகருகாமல்வாங்கு திறுக்கையிலேகுன்றியிடைபனவெல்லத்தில் நேச மாய்கொட்டிடவேசூலைவாங்கும், ஓறுக்கையிலேயிதன்சுறுக்குளதுக் குயில்லை ஓங்காரகோகுஷ்டமெல்லாமொழிந்துபோகும, மறுக்கையி லேயிதின்சுருக்குளதுக்குமில்லைவாதநீர்விஷக்கடிகள்வாங்கிப்போமே

துரிசெந்தூரம்,

வாங்கிப்போந்துரிசெந்தூரத்தைக்கேளு வாகான அரைப்பொடி தான்பலந்தானென்று, தேங்கிப்போங்கெந்தகந்தான்பலந்தானென்று திறமாகவதன்பின்புசெப்பக்கேளு, தாங்கிப்போந்துரிசியதிற்பலந்தா னென்று சாதகமாய்ப்பழச்சாற்றிலதினம்ரெண்டாட்டு, ஓங்கியதோர் வீரமதுகழஞ்சியொன்று உத்தமனேஅரைத்ததனைவில்லைகட்டே. (ா)

கட்டியேரவிதனிலேயுலர்ந்தபின்பு கனபுடமேபோடப்பாமயங்க வேண்டாம், ஒட்டியேஆறினபின்செந்தூரந்தானுண்மையாய்த்திரிகடு கில்குன்றியிடைகூட்டி அட்டியாய்மண்டலந்தான் கொள்ளும்போது ஆச்சரியங்குன்மமென்றதெல்லாம்போகும், சுட்டியேசொர்ப்பத்தில் தோஷம்போகுந் துடியானகிராணியெல்லாஞ்சூட்டப்போமே. (ாக)

அயக்காந்தச்செந்தூரம்,

சூட்டப்பாவரைப்பொடிதான்பலந்தானென்று துடியானகெந்த கந்தான்பலந்தானென்று,மூட்டப்பாலிங்கமொடுகாரசாரம்மூனையாள உப்புமொண்டுகூடன்சீனம், மாடப்பாவகைபொன்று கழஞ்சியொன்று வதியென்றபூவதிலேகழஞ்சியொன்று, வாட்டப்பாகாந்தமதுபலங்கா ல்கூட்டி வளமாகபழச்சாற்றிலரைத்திடாயே. (ாஉ)

அரைத்திடுவாய்ரெண்டுநாள்கைவிடாமல் அப்பனேஉலந்தபின்பு வில்லைதன்னை, விரைத்திடுவாய்வராகபுடமாறிப்பின்புவிளங்கினதோ ர்முருக்கம்பூப்போலாம்வில்லை, நிறைத்ததனைப்பொடிசெய்துபதனம் பண்ணு நிலையில்லாப்பாவியென்றபாண்டுரோகம், கரைதடுக்கவொட் டாதுகடலேபுக்குங் கைகண்டசெந்தூரங்கண்டுகொள்ளே. (ாங)

பாண்டுலேகியம்,

கண்டுகொள்ளுமாவின்பாலபடி-தானென்று சைலோகம்நன்னாரி விலாமிச்சம்வேர், விண்டுகொள்ளுங்கிழக்காய்நெல்லிவேரும் விளங்

இயதோர்வகையொன்றுபலந்தானென்று, உண்டுகொள்ளும்படியெ ட்டுசலத்தினுள்ளே உத்தமனேபோட்டுலர்த்திபடிதானென்று, மண் டுபடாப்பாலுடனேகூடவாரு மைந்தனேகமுகம்பூச் சாறுவாரே,

வாரப்பாபடியொன்றுபழச்சாரங்கே வரிசையாய்ப்படியொன்று கரியான்சாறு, சேரப்பாபடியொன்றுகீழ்க்காய்நெல்லித் தெளிவாகத் தாழைச்சார்படிதானென்று, சாரப்பாரெண்டுபத்துப்பலந்தான்வெல் லம்தான்கரைத்துஎரியிடவேபாகுசேரில், ஏரப்பாதிரிபலையுஞ்சீரகத் தினோடு இயல்பானதிரிகடுகுஏலந்தானே, (௱௫)

ஏலமிலவங்கத்தோலிலைகிராம்பு எவாச்சாரஞ்சாதிக்காய்நறுக்கு மூலம், வால்மிளகுவாய்விளங்கம்கோட்டப்பாக்குவகையொன்றுபல மொன்றுசூரணித்து,ஆலைவாய்சங்குபொடியதிலேபாதி யப்பனேபா குவரும்போதிற்போடு,சாலவே ஆவின்நெய்படிதான்வாறுதவறாமல் தேனதிலேபாதிவாரே, (௱௬)

வாத்திடவேமெழுகுபதமானவாறில் மைந்தபேங்காணில்பதன ம்பண்ணு, கோத்திட்டுலோகசெந்தூரத்தில்தின்னு குன்றியிடைதின மொன்றுக்கொருநேரந்தான். சர்த்திடவேலேகியந்தான்கழஞ்சுரெண் டு சாதித்துமண்டலமேதின்பாயாகில், ஏத்திட்டஎந்தவகைப்பாண்டா ணும் இலேகியசெந்தூரத்தைக்கண்டபோதே, (௱௭)

கண்டவுடன்பாண்டங்கேபறந்துதப்பா காயங்கள்வெளுத்திருந் ததெங்கேபோச்சு,கொண்டவுடன்புளியோடுபுகையிலையுமாக கெ[illegible] மையுள்ள பெண்ணுகாதுழுந்துமாகா, பண்டுடையபத்தியத்தைவிட் டானால் படுபாவிலேகியசெந்தூரந்தானே, சண்டமாருதம்போலே மெய்யழித்துச் சண்ணுமடாமாற்றுமருந்தில்லைதானே, (௱௮)

மண்டூரச்செந்தூரம்,

இல்லையென்றுபோகாமல்சொல்லக்கேளு எலுமிச்சம்பழத்தை நாலாகக்கீறி, தொல்லையென்றுபோகாமல்அயச்செந்தூரந் தூக்கடாப லங்கால்தான்மண்டூரத்தைச், செல்லவேசமனாகக்கெந்திகூட்டித் திற மாகப்பழச்சாற்றால்ரெண்டுசாமம், அல்லவேஅரைத்துவில்லையுலர்ந்த பின்பு அப்பனேவாகாப்புடமாறிப்பின்பு, வல்லதொருசெந்தூரங்கால் பலமேதூக்கி வகையானஇந்துப்புக்கழஞ்சிரெண்டுகூட்டே, (௱௯)

கூட்டியேமுன்மருந்துமொன்றாய்ச்சேர்த்துக் கொ[illegible] மேனர்கழஞ்சுகூட்டி, நாட்டியேபழத்துக்குச்சேரவிட்டு நலமானயரி யான்சார்நாழிவிட்டு,மூட்டியேகற்றாழஞ்சாறுநாழிமுழுகுநின்றசெரு

படியின்சாறுநாழி, தாட்டிசுமாய்மூன்றுமொன்றாய்ச்சாறுவார்த்து ச
ட்டியிலேபழத்தையெல்லாம்பதித்துவைபே, • (௱௰)

பதித்துவைத்துயெரித்துநீஅவித்துக்கொண்டு பாங்கானபக்குவ
த்தில்புதுப்பாண்டத்தில் பதித்துவைத்துநெற்குழியில்பத்துநாள்வை
பசுவினிட தொழுவத்தில்பத்துநாள்வை, பதித்துவைத்துப்பழந்தன்
னைதினமொன்றாகப்பத்துநாளகொள்ளப்பாபாண்டுபோகும், பதித்தி
ருந்தவாதநீர்ப்பாண்டானாலும் பறக்குமடாபறக்குமடா பாண்டெல்
லாமே, (௱௧௧)

எல்லாரும்வயித்தியன்போல்நோவுபார்த்தால் இனைத்ததுவோ
நோயப்பாவேழைமாண்பர், வல்லாரும்வர்தி மகன்வயித்தியனுவான்
மற்றவர்கள்நோயறியாமடையரப்பா, கொல்லுமடாகெந்தகத்தைவா
வாங்கிநீயுங் கூட்டிடுவாய்சமனென்றவிடந்தஞ்சானைக், கல்லானமெகந்
தகமாஞ்சாமமொன்று காணப்பாஅரைத்துவில்லைகட்டிப்போடே, ()

கட்டியடாஅஞ்செருவிற்புடத்தைப்போடு கலங்காதகெந்தகந்
தான்என்னசொல்வேன், வெட்டுபடாகுஷ்டமொடுகிரந்திசூலை வெல்
லுமடாசூதபற்பங்கூட்டித்தின்னு, பட்டுவிடுமேகநிறமேகசூலை பறக்
குமேமேகத்திலெழுந்தவாய்வு, திட்டமடாபத்துநாள்கொள்ளும்போ
து சித்தியடாகற்பத்துக்குறுதிகாணே. (௱௧௩)

வெண்கலச்செந்தூரம்,

உறுதியென்றவெண்கலச்செந்தூரங்கேளு உத்தமனேவெண்கல
ந்தான்பலந்தானென்று, அறுதியென்றசிலாசத்துப் பலந்தானென்று
அண்டத்தோல்பலமொன்றுகுடிலமொருபலந்தான், விறுதியென்றவீ
ரமதுபலந்தான்கொண்டுவீருணதாளகந்தான்பலந்தான்ரெண்டு, பொ
றுதியென்றகெந்தகந்தான்பலந்தானாறு போட்டரைப்பாய்கல்வத்தில்
பழச்சாற்றாலே, (௱௧௪)

பழச்சாறுவிட்டரைப்பாய்மூன்றுநாள்தான் பாங்காகவில்லைசெ
ய்துரவியில்காய்ந்தால், வழைச்சல்லோடோட்டுதடாமாட்டிக்கொண்
டு வராகபுடமானதிலேசெந்தூரந்தான், இழைச்சல்லோவெல்லத்தி
ற்குன்றிஇடைகொள்ள என்னசொல்வேன்குன்மங்களெட்டுந்தீரும்,
தழைச்சிருந்தமேகத்திலெழுந்ததெல்லாந் தவறுண்டே போகுமடா
சார்ந்துபாரே. (௱௧௫)

முத்துச்செந்தூரம்,

பாரப்பாமுத்துமணிபலந்தானென்று பதைப்படங்காநாகமதுப
லந்தானென்று, சேரப்பாசூதமொருபலந்தானென்று சிறப்பானவீர

மொருபலந்தானென்று, வாரப்பாமூலேப்பாலி வரைப்பாயோர்நாள் வாகாகவில்லேசெய்தூரவிமிற்போடு, வேரப்பாபூரகமுசிஞ்கொந்தகந்தா ன்விளங்கவேமொண்டுபலங்கூட்டியாட்டே. (எயசு)

ஆட்டியேபுடம்போடுகோழியப்பா - அரகராமுத்துமணிச் செந் தூரந்தான், நாட்டவேகிரந்தியுறும்யோனிப்புற்றும் - நல்லிலிங்கப்பு ற்றுடனேகண்டமாலே, மூட்டவேமூலங்கள்பிளவையரையாப்பு மூக் கினுள்ளேசதைத்துணுக்காம்பிரசங்கள், காட்டவேசெந்தூரங்கண்ட போதிற்காணப்பாகெடிகலங்கியோடுந்தானே. (எயஎ)

தாளகச்செந்தூரம்

தானதாளகந்தான் பலந்தானென்று - சாம்பழத்தின்சாறுப டிசுருக்குப்போட்டு, வேனைமூலேப்பால்கால் படியேதாக்கு-விளங்க வேயூரலறும்பின்புகேளு, வானைதிருகுகள்ளிப்பால்தாணுழி- வாங்கி யதிற்போடுகிறமருந்துகேளு, கோனைதிருகுகள்ளி உப்புப்பூவுங்கொ டியநவாச்சாரமொடுவீரந்தானே (கஅ)

வீரம்பூரத்துடனேவெடியுப்புச்சீனம் - விளங்கவேவகையொன் றுகழஞ்சியொன்று, சேரவேபொடித்தந்தப்பாலிற்போடு - சிறப்பாக மூன்றுநாள் சலமதாகும், நீரவேதாளகத்திற்காரங்கால்தா - னிறுத்து விடுமுன்சொன்னபலவிதத்திற், சாரமதுகால்பலந்தான் கூட்டிக்கொ ண்டுசாகவேயரைத்திடுவாய்மூன்றுநாளே. (கககூ)

நாள்மூன்றுஅரைத்துவில்லேப்பணம்போற்கட்டி நலமாகச்சுத்தி செய்வாய்தாம்பிரத்தைக், கோள்மூன்றுய்த்திருமப்பா வூறல்வாங்கும் கூறுவேன் அண்டத்தோல்பலந்தானென்று, கேள்மஞ்சள்கட்டானவ ஊயலோடு கெடியானவெடியுப்பக்காரஞ்சாரம், பாள்காணுப்பூவீரம் பூரஞ்சீனம்-பாகாகவகையொன்றுகழஞ்சிரெண்டே. (கஉய)

ரெண்டுடனேயண்டோடுகூட்டிக்கொண்டு-நிரையாகப்பழச்சாறு அரைப்படிதான்விட்டாடிக், கொண்டுடனேவில்லேசெய்து உலர்த்திக் கொண்டு- கொடுத்திடுவாயொவ்வாதராசிக்கேதான், பண்டுடனேதாம் பிரமதுபலந்தானஞ்சு-பாங்கானகுகைக்குள்ளே உருகும்போது, தண் டுடனேதாம்பிரத்திற்பிலத்தசுத்திசண்டாளவூறலறுந்தாம்பிரந்தானே

தானன்றுய்ச்சுத்திசெய்த தாம்பிரந்தன்னைத் - தடையறவேமறு குகையிலிருக்கும்போது,ஏனென்றதாளகத்தின்மெழுகுவில்லேஇயை ந்திடுவாயொவ்வொன்றுய் கொடுத்தபின்பு, தேனென்றநிறம்போச்சு வெண்கலம்போலாகும்-திடமாக வடித்துடனேதகர்ந்துதுளாம், பா னென்றகல்வத்தில்பொடித்துக்கொண்டு - பாங்காகக்கண்டிடைக்குச் சுதம்வாரே. (கஉஉ)

சூதத்தினிறைபோடுவீரந்தன்னைத் - துடியாகமுலைப்பாலிலரைத் தபின்பு,நாதமென்றபூநீறொண்டுபத்துக்கொன்று - நாட்டியரைமூன் றுநாள்பின்புகேளு, பாதமென்றவாலரசமட்டைப்போலாம் - பண்பா கக்கண்டிடைக்குக்கெந்திகூட்டு, நீதமென்றபொற்றலையின்சாற்றாலா ட்டி-நிலைத்திடுவாயன்பதெருப்புடத்தைப்போடே. (கஉ௩)

புடத்திலேயிருந்துறைந்தசெந்தூரந்தான்-பேசாதேவயிரவர்க்கு ப்பூசைபண்ணு, திடத்திலேசாம்பிரத்தின்செந்தூரத்தைத் - தினங்கு ன்றிப்பிரமாணம்திரிகடுகிற்சேர்த்து, தடத்திலேமண்டலந்தானுண் ணும்போது-நாளானபீலிகையுங்குன்மத்தோடே, சடத்திலேஉண்டா னகனப்புவாய்வு-சாங்கமாய்தீர்க்குமடாதாம்பிரந்தானே. (கஉ௪)

அநுபானநவசிந்தாமணிலேகியம்.

தாம்பிரசெந்தூரத்தைத்தின்னும்போதுதட்டுண்டுகுன்மம்போ மனுபானங்கேள்,காம்பியேபுளித்திருந்தகாடிபடியொன்று-கண்டங்க த்திரிச்சாறுபடிதானென்று தேம்பியதோர்திருமேனிச்சாறுபடியொ ன்று சிறுசெருப்புக்கால்சாறுபடிதானென்று, வேம்பினிடபட்டை ச்சாறுபடிதானென்று - மேலானகையான்சாறுபடிதானென்றே.

ஒன்றான்விஞ்சிச்சாறுபடிதானென்று-உத்தமனேபசுமலையின்ப ட்டைதன்னை, நன்றாகவெண்படிநீரொருபடியிற்காய்ச்சி - நலமானகி ஷாயமதுபடிதானென்று, மன்றாகப்பிரமிச்சாறுபடிதானென்று- வா காகவிதுவெல்லாந்தாளிக்குள்ளே, சென்றுடவொன்பதுசாறென்று ய்ச்சேர்த்துச்-செப்பக்கேள்பனைவெல்லம்சேரப்போடே. (கஉ௫)

போடக்கேள்மூன்றுபத்துப்பலந்தான்போடு- புகழாம்வெள்ளெ ருக்கம்வேர்ப்பச்சைப்பட்டை,ஆடப்பாபலமொன்று அரைத்துக்கொ ண்டு-அப்பனே அன்பதுகாய்க்கச்சல்வாங்கி, சூடப்பாநன்றாக நறு க்குத்தட்டி- சுகமாகஅரைத்திடுவாய்ப்பிசின்போலாகத், தேடப்பாவி ருமருந்துஞ்சாற்றிலேடே- சேர்த்துநீகரைத்திடுவாய்செப்பினேனே.

செப்பினேன்உனக்காகப்புலத்தியனேஅய்யா-தீராதகுன்மமெல் லாஞ்சேரத்தீரும், செப்பினேன் + சோகிநீறுபலந்தானென்று-திரை நுரையின்நீறுபலஞ்சங்குநீறுசெப்பினேன்பலமொன்றுபூநீறப்பாசே ரவேயிதுவெல்லாம்சுட்டசுண்ணஞ், செப்பினேன்திருகடுகுவாய்விள ங்கந்-திப்பிலிமூலத்தினொடுசித்திதானே. (கஉ௬)

+ சோகி பலகறை.

சித்திரமூலத்திறைடுகெடுகுவோமம் செவ்வியங்கோஷ்டமதுரஞ் சீரகந்தான், முத்திரையாங்காயமொடுவசம்புகாந்த முழுங்கவேவகை யொன்றுக்கரைப்பலந்தான்சேரு, சத்தியேவாச்சாரம்நவாச்சாரம்சீ னம் சவர்க்காரம்பொறிகாரமிணங்கண்கூடன், பத்தியாய்க்கொடிகழ ஞ்சிபருப்பிந்துப்புபாங்கானகல்லுப்புப்பாதிசேரே. (கஉகூ)

பாதியாம்வகையொன்றுக்காற்பலந்தான்கூட்டிப் பண்பாகாரக் கெல்லாம்சூரணித்துக்கொண்டு. நீதியாங்கருவேம்பி ரிலையைவாட்டி நோகச்சூரணித்துமருந்திற்சேர்த்து,சாதியாஞ்சாரெல்லாம்பாகுசே ரிலதக்கதொருசூரணத்தையதிலேபோட்டு, கோதிடுவாய்த்தேனுமொ ருபடிதான்வாரு கூற்ணநெய்யுமொருபடிதான்வாரே. (கஙம)

வாரப்பாமெழுகுபதமானவாறே வாய்ப்பாகப் பீங்கானில்லவழி த்துவைப்பாய், சேரப்பாலேயியந்தான்கழஞ்சியள்ளிச் சிறப்பாகத்தா ம்பிறச்செந்தூரத்தைச் சாரப்பாகுன்றியிடையாகக்கொள்ள சாந்தமா ம்புகையிலையும்புளியுந்தள்ளு, வேரப்பாஅஷ்டகுன்மமெட்டுந்தீரும் வெகுசுருக்குநவசிந்தாமணியென்றேனே. (கஙக)

நவசிந்தாமணி,

நவசிந்தாமணியானலேகியத்தை நல்லதொருகற்பசித்திக்காகச் சொன்னேன்,புவனங்கள்திரிந்தலையும்வயித்தியனேகாண்பான் புத்தி யுள்ளவாதிமகன்குன்மந்தீர்ப்பான், எவராலுந்தாம்பிரத்தைசெயிக்க மாட்டார் இந்தவகைலேகியமுஞ்செய்யமாட்டார், அவன்பிழைப்புக் கேதாலுமொன்றைச்செய்வா னாகாதவயித்தியனுமாமென்றேதே, ()

ஓதினேன்தீட்சையிருநூற்றுக்குள்ளே யுத்தமனேவடுகனுடபூ சைமார்க்கம், ஆதியாம்வயித்தியனுக்கப்பாகேளு வானன்றிச்செந்தூ ரமாகாதொன்றுஞ், சாதியாம்சூத்திரசென்மத்தோர்க்கன்றிச் சகலரு க்கும்பலியாதுதவருண்டேபோம், வாதியாமகன்றனக்கு வயித்தியமு ஞ்சொன்னேன் வயிரவனைப்பூசைபண்ணிவணங்கிப்பாரே, (கஙங)

அயக்காந்தச்செந்தூரம்,

பாரப்பாஅரைப்பொடிதான்பலந்தானென்றுபரிவானகாந்தமது பலந்தானென்று, சேரப்பாகெந்தகந்தான்பலந்தானென்று திறமான பூநீறுகழஞ்சியொன்று, காரப்பாபழச்சாற்றாலிரண்டுசாமங் கடுகவே யரைத்துவெயிற்காயப்போட்டு, ஆரப்பாமறுநாளும்ரெண்டுசாம மட ங்கவேயரைத்துவில்லைக்காய்ந்தபின்பே, (கஙச)

பின்பதனைசுடுசெங்கல்குகைக்குள்வைத்துப் பேசாமல்மேலும் தாள்மூடிக்கொண்டு,வின்பதனைசீலைமண்தான்ரெண்டுசெய்து விதமா

கழுண்டளவுகுழிதான்வெட்டி, அன்பதெருக்குள்ளேதான்புடத்தைப்போடுஆறியபின்னெடுக்கச்செந்தூரமாகுந், துன்பமதுகற்பத்தாற்கூடுகொண்ட-தோஷலோடுஅஸ்திமுதர்கனப்பும்பாரே. (கஙரு)

அநுபானலேகியம்.

கனத்திருந்தநீர்த்தோஷங்கபால்வாய்வு - கண்புகைச்சல்காதுமந்தங்காணுந்தோடு, மனத்துறமேவசாதிக்காய்சாதிபத்திரி - மதுரஞ்சீரகமோமம்குருசாணியோடு, இனத்திருந்தவாய்விளங்கம்நறுக்குமூல-மேலமதிவிடையமொடுகாயஞ்சுக்கு, தனத்திருந்ததிப்பிலியுமிளகுங்கூட்டிச்-சதிரானஆபின்கோஷ்டந்தானென்றுமே - (கஙசு)

ஒன்றானமருந்தெல்லாம்வகைக்குக்கேளு - உறவாகப்பலமொன்றுவறுத்துக்கொண்டு, நன்றாகச்சூரணித்துப்பினபுகேளு- நாலுபலம்பனைவெல்லமென்றுஞ்சேர்த்துக், குன்றாமலிடித்ததனைமையாய்ச்சேர்த்துக்கூட்டட்பாசூரணத்தைரேகித்தேதான், சென்றுடும்நறுந்தேனைக்கால்படிதான்விட்டுச் செவக்கவொருபீங்கானிலடைத்துவையே. ()

அடைத்துவைத்தமருந்தப்பாகழஞ்சிரெண்டு அயக்காந்தச்செந்தூரங்குன்றிகூட்டி, யிடைத்துவிடுமண்டலந்தான்தின்னுதின்னு வெளிதல்லஆறுவகைகிராணியெல்லாஞ், சடைத்தங்கேயோடிப்போம் புவியுள்ளோர்க்குத் தாக்கிறுற்புளியோடுபுகையிலையுமாகா, உடைத்துவிடு* முதரத்தில்நின்றவாய்வு ஓமுடிந்துபோகுமடாஉண்மைகாணே.

வெள்ளீயச்செந்தூரம்.

காணப்பாவெள்ளீயஞ்சுத்திசெய்து கசகாமலுருக்கியேகல்வத்திட்டு, பூணப்பாவெடியுப்புரோமப்பூவும் புகழாகப்பலத்துக்குக்கழஞ்சிவீதம், தோணப்பாராசிவங்கம்பலந்தானென்று துடிகொண்டகெந்தகந்தான்பலந்தான்ரெண்டு, நாணப்பாபழச்சாற்றாலிரண்டுசாமம் நன்றாகவரைத்துவைப்பாயெருக்கம்பாலே, (கஙஎ)

பாலாலேசாமம்ரெண்டுஆட்டிக்கொண்டு பதைப்படங்காநவாச்சாரம்பலமுங்ககால்தான்வாலாகப்பொற்றலையின்சாற்றாலாட்டிமாட்டுவாய்சாமம்ரெண்டுமடங்குமப்பா, சேலாகவில்லைசெய்துரவிற்போடு திறமாகமூன்றுநாள்காய்ந்தபின்பு, காலாகநுறெருவிற் புடத்தைப்போடு கைமுறையால்ராசிவங்கசங்கநகந்தானே. (கசய)

கனகந்தான்ராசிவங்கச் செந்தூரத்தைக் கைமுறையாயெட்டிலொன்றுகூதங்கூட்டிக், கனகந்தான்றேகவப்பா சீனியிற்கொள்ளக்

* உதரம்-வயிறு,

ண்டதால்குங்கபாலபுற்றுக்கபாலவாய்வு, கனகந்தான்அஸ்திலேபாய்ந்தவெட்டைக்கசுமாலகுன்மமொடுகண்டமாலைக், கனகம்போலுறைந்திருந்தநோய்களெல்லாங் - காணாதேகடல்புக்குங் கருத்துள்ளோர்க்கே. (கசுக)

கருத்துறவேவாதிமகன் வயித்தியஞ்செய்தால் - கதிகெட்டநோயாளிபணியவேணும், கருத்துறவேமருந்துக்குப் பத்தியம்வேணுங்-கைமுறையாய்ச்செய்கின்றவயித்தியர்க்குச், கருத்துறவேமனதுவரநடக்கவேணுங் - கழுதைபோலேயிருந்தால்பலியாதொன்றுங், கருத்துறவேயிதற்கல்லோசித்தர்சாபங்-கட்டினார்மனதுவரநடந்துகொள்ளே

நடந்துகொள்ளானோயாளிராசாவென்றால் - நாட்டினாலவர்க்கங்கேமருந்தேராது, துடர்ந்துகொள்வேனென்றுன்னைப்பத்திவைத்தால் சுருக்காகத்தீருமடாசாபமேது, அடர்ந்துபோயவன்வாசல் காத்தாயானால்- அவனுக்குக்கொஞ்சம்போ லுபசாரஞ்செய்யான், சடந்தனக்குநோய்வந்தால்குருவேயென்பான்-சாதூரியமாய்த்தீர்ந்தால்தம்பியாமே

தம்பியென்பான்நோயெல்லாந்தீர்ந்தபின்பு - தாய்தந்தைகுருவென்பான்நோய்தீராமுன்பு, வேம்பியதோர்மனமாகி வயித்தியனைப்போற்றி மேவணபடியுபசாரம்பின்பாகட்டென்பான், கும்பியல்லோகொதிக்குதென்றுவுள்ளம்நொந்து - கொண்டங்கே வயித்தியனார்கூர்மைக்கேதான், சம்பியமுகம்வாடிற்சாபம்வேறே- சாத்தினேனிதுவறிந்து மருந்துவாங்கே. (கசுச)

வாங்கியேவிசுவாசமாகக்கொண்டால் - மருந்தென்னவயித்தியன்கைபட்டாற்போலும், ஏங்கியேதிரியாதேவயித்தியசாப - மேகிடவேசாபத்தினிவிர்த்திகேளு, ஓங்கியோம்விந்துவுடனாகங்கூட்டிஉறவாகச்சிங்கென்றுஒருலெட்சந்தான், பாங்கியேவடுகனுடசாத்தியந்தான்-பார்பிரமன்மாயனொடுபகரக்கேளே. (கசுரு)

வயித்தியமுறைமை.

கேளப்பாவயித்தியந்தான்சொன்னபடிகேட்கும்- கெடியாகச்சித்தருடமறைப்பையெல்லாம், வாளப்பாவெளியில்விட்டேன் வயித்தியத்துக்காக - மாநிலத்துநோயாளிமயங்காமலய்யா, கேளப்பாவாராமற்சாபகோபங்-கூறினேன்வாதிமகன்வயித்தியனாகில், தேளப்பாகொட்டுதல்போல்பூவினீறு-நோட்டால்செந்தூரஞ்சாய்ம்பாச்சே கசுசா)

போச்சுதென்றுமலையாதேசொல்லக்கேளு - புகழானபூநீறுபலந் ஞென்று, காச்சென்றேன்சுத்தசலந்தன்னிற்காச்சிக்-காச்சுவதுகடுவெ ய்யில்நீரைவற்றி, வாச்சென்றேயிருக்கும்பூமாதளங்காய்- மகத்தானபூ வப்பாவிந்தச்சுண்ணம், பாச்சென்றேன்கிலவுப்புமந்தச்சுத்தி பண்ண ப்பாறையுப்புமந்தப்பாங்கே. (கசஎ)

பாங்குடனேமுப்பூவும்வெடியுப்போடு-பழிகாரச்சூடனொடுஅஞ் சும்நேராய், வரங்கியேகிளிஞ்சியுடசுண்ணந்தன்னை - வரிசையாய்ச்சம் பாகமாகவாட்டித், தாங்கியேவெள்ளெருக்கம்பாலுவார்த்துச்- சாரமா ம்பழச்சாறுந்தான்வெவ்வேறே, யோங்கியேயிருசாமம்ரெண்டுநீருமு த்தமனேயரைத்துவில்லைராவியிற்போடே. (கசஅ)

போடப்பாபத்துநாள்காய்ந்தபின்பு-புகழானசுண்ணும்புபொடிக் குள்வைத்து, சூடப்பாகமலம்போல்தீயைமூட்டித் - துடியாகவிருசா மஞ்சேரநீறும்-ஆடப்பாவிதிஞட்டுச்செந்தூரத்தாட்டு.வடங்காதநோ ய்களெல்லாமகன்றுபோகும் -தேடப்பாசிப்பியுடசுண்ணஞ்சொல்வே ண்திறமானபூநீற்றின்குருவதாமே. (கசகூ)

கிளிஞ்சிற்சுண்ணம்.

குருவாகுங்கிளிஞ்சியுடசுண்ணமப்பா - கூறக்கேளுமைதன்னைச் சுண்ணம்பண்ண, தருவாகுங்கற்சுண்ணமுவருங்கூட்டிச்-காதகமாய்ச் சுத்தசலந்தன்னிலேதான் திருவாகக்கரைத்திலே கிளிஞ்சியிட்டுத்-தீ யெரிப்பர்யிருசாமஞ்சென்றபின்பு, அருளானஊமைதனைப்பேசப்ப ண்ணி-ஆச்சரியம்உள்மருந்துபூச்சக்கேளே. (கரு௰)

பூச்சப்பாவீரமொடுசூடன்சீனம் புழுகுநவாச்சாரமொடுகெல்லுப் போடு வீச்சப்பாவகையொன்றுபலந்தாஞென்று,மீறியதோர்கிளிஞ்சி யதுபலந்தான்பத்து; ஆச்சப்பாமருந்தெல்லாம்அரைக்கும்போது-அ ண்டத்தின்நீறுபலம்ரெண்டுபோடு, தீச்சப்பாபழச்சாற்றிலரைத்துக் கொண்டு-சிறக்கவேயுடன்பூசிப்புடத்தைப்போடே. (கருக)

புடம்போடுநூறெருவில்பிலத்தசுண்ணம் - பின்பொருக்கால்வெ ண்கருவாலரைத்துவூது- திடமாகச்சுருக்கிட்டசுண்ணமாகுஞ்-செய்கி ன்றகைமுறைக்குஞ்சோம்பலாகா, நடமாடவெளுக்குமட்டும்வெண்க ருவாலாட்டி-நாலாறுபுடம்போடுகெடியசுண்ணம், உடனுடுசத்துருவா மண்டநீறும்-உற்றதொருகிளிஞ்சிதன்னைமடக்கலாச்சே. (கருஉ)

மடக்குமடாபுலத்தியனேயுனக்குச்சொன்னேன்-வரிசையாயண் டமதுபத்துவாங்கி, கிடக்குமடாபாண்டத்துள் பீங்கான்வைத்து கெ டிய கவதிலிட்டுப்பழத்தின்சாறு, சுடக்குமடாபடியொன்று அழுங்

